111204

OL/2015/33-T-I





33 T I

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2015 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2015 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2015

ඉතිහාසය I
வரலாறு I
History I

පැය එකයි
ஒரு மணித்தியாலம்
One hour

**கவனிக்க:**

(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக. இவ் வினாத்தாளுக்கு **80** புள்ளிகள் வழங்கப்படும்.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

**1.** ஒரு நாட்டின் நிகழ்காலமும் எதிர்காலமும் நிச்சயமாக அதன் இறந்தகாலத்தின் மீது கட்டியெழுப்பப்படுவதாகக் குறிப்பிட்டவர்
(1) சேர் வின்சன்ட் சேர்ச்சில் ஆவார். (2) ஈ. எச். கார் ஆவார்.
(3) ஸ்ரீ ஜவகர்லால் நேரு ஆவார். (4) ஆபிரகாம் லிங்கன் ஆவார்.

**2.** இலங்கையின் வரலாற்றுக்கு முற்பட்ட காலம் பற்றிய தகவல்களைத் தேடும் ஒருவருக்கு முக்கியமான மூலாதாரம் பின்வருவனவற்றுள் எது ?
(1) கல்வெட்டுகள் (2) கிராமியக் கதைகள்
(3) குகை ஓவியங்கள் (4) கற்கருவிகள்

**3.** இலங்கையின் புத்தசாசன வரலாற்றைக் கற்கும்போது முக்கியமானதாய் அமையும் இலக்கிய மூலாதாரம்
(1) ராஜாவலி (2) நிக்காய சங்கிரக
(3) தர்ம பிரதீபிகா (4) சத்தர்மரத்னாவலி

**4.** எமது தொல்பொருட்சான்றுகளைப் பாதுகாத்தல் மிக முக்கியமானது. ஏனெனில், அவை
(1) கடந்தகாலத்துக்குரியன என்பதனாலாகும்.
(2) விலை மதிப்பற்றவை என்பதனாலாகும்.
(3) நாட்டின் பண்பாட்டுப் பாரம்பரியத்தை வெளிப்படுத்த ஏதுவானவையாக அமைவதனாலாகும்.
(4) வெளிநாட்டு சுற்றுலாப் பயணிகளுக்குக் காண்பிக்கக்கூடியவை என்பதனாலாகும்.

**5.** கி.பி. 5ஆம் நூற்றாண்டில் அனுராதபுரக் காலத்து அரசர்குலப் பெண்களின் ஆடை, அணிகலன்கள் பற்றிய விளக்கத்தைப் பெற்றுக்கொள்ளக்கூடிய மூலாதாரத்துக்கு உதாரணமாய் அமைவது,
(1) சிகிரியா ஓவியங்களாகும். (2) திவங்க படிமாகரத்து ஓவியங்களாகும்.
(3) தெகல்தொறுவ விகாரை ஓவியங்களாகும். (4) களனி விகாரையின் ஓவியங்களாகும்.

**6.** பௌத்த சமயம் இலங்கையில் பரவிய அனுராதபுரகால ஆரம்பத்தில் பரவலாகக் காணக்கூடியது
(1) தூண் கல்வெட்டுகள் (2) குகைக் கல்வெட்டுகள்
(3) பாறைக் கல்வெட்டுகள் (4) துண்டுக் கல்வெட்டுகள்

**7.** இலங்கை தொடர்பான தகவல்களை வெளியிட்ட வெளிநாட்டு எழுத்தாளர்களின் அதிகளவான கவனத்தைப் பெற்றிருப்பது,
(1) இந்நாட்டில் நிலவிய வர்த்தகம் ஆகும்.
(2) இங்கு பரவியிருந்த சமயங்கள் ஆகும்.
(3) அனுராதபுரத்தில் ஆட்சி செலுத்திய ஆட்சியாளர்கள் ஆவர்.
(4) காலத்துக்குக் காலம் இந்நாட்டின்மீது மேற்கொள்ளப்பட்ட ஆக்கிரமிப்புகள் ஆகும்.

**8.** புராதன இலங்கையர் நீர்ப்பாசன நடவடிக்கைகளுக்காக பெரிதும் பயன்படுத்திய மகாவலி கங்கையுடன் **தொடர்புபடாத** நீர்ப்பாசன நிர்மாணிப்பு யாது ?
(1) எலஹர கால்வாய் (2) அங்கமதில்ல கால்வாய்
(3) ரிதீபந்தி கால்வாய் (4) மினிப்பே கால்வாய்

[பக். 2 ஐப் பார்க்க

**9.** யோதக் கால்வாய் அல்லது ஜய கங்கை அதி சிறந்ததொரு நீர்ப்பாசன நிர்மாணிப்பாகக் கருதப்படக் காரணமென்ன ?
(1) கால்வாயின் அடிப்பகுதியிலுள்ள மென்சாய்வு
(2) கால்வாயினூடாக நீண்டதூரத்திற்கு நீர் கொண்டு செல்லப்படல்
(3) கலாவாவியையும் திசாவாவியையும் இணைத்தல்
(4) பல சிறு குளங்களுக்கு நீர்வழங்கல்

**10.** மேல்வரும் வரலாற்றுச் சம்பவங்களை அவற்றின் காலக்கிரம வரிசை ஒழுங்கில் காட்டும் சரியான விடை யாது ?
A – திரிபிடகம் நூலாக்கம் பெறல்
B – கலிங்க-மாகன் பொலன்னறுவையை ஆக்கிரமித்தல்
C – ஸ்ரீமாபோதி மரக்கிளை நடப்படல்
D – சீகிரியா கோட்டை நிர்மாணிக்கப்படல்
(1) C, A, D, B (2) C, B, A, D (3) C, D, A, B (4) C, D, B, A

**11.** அனுராதபுர காலத்தின் ஆரம்பத்தில் இந்திய-இலங்கை தொடர்புகளில் முக்கிய அம்சமாகக் காணப்பட்டது
(1) வர்த்தக தூதுவர்களின் பரிவர்த்தனை
(2) யுத்த உதவிகளைப் பெற்றுக்கொள்ளல்
(3) ஆக்கிரமிப்பு
(4) புலம்பெயர்தல்

**12.** அனுராதபுரக் காலத்தில் நிர்மாணிக்கப்பட்ட முதலாவது தூபி,
(1) ரத்னமாலி சைத்தியம்
(2) தூபாராம சைத்தியம்
(3) திஸ்சமகாராம சைத்தியம்
(4) மஹியங்கனை சைத்தியம்

**13.** யாழ்ப்பாண ராசதானியின் பிரதான இந்து சமய நிலையமாகவும் தலைநகராகவும் காணப்பட்டது
(1) வல்லிபுரம் (2) சாவக்கச்சேரி (3) கந்தரோடை (4) நல்லூர்

**14.** அனுராதபுரத்து ரண்மஸு உயனவுக்கும் குட்டம் பொய்கைக்கும் நிலக்கீழ் குழாய் வழியாக பின்வருவனவற்றுள் எந்தக் குளத்திலிருந்து நீர் கொண்டு செல்லப்பட்டதாக உறுதிப்படுத்தப்பட்டுள்ளது ?
(1) பசவக்குளம் வாவி (2) திசாவாவி (3) நுவர வாவி (4) நாச்சதூவ வாவி

**15.** 'பட்டணம்' (பட்டுன்கம்) என்பது,
(1) வர்த்தக நகரங்களை அண்டிய குடியிருப்புகளாகும்.
(2) பல்வேறு கைத்தொழில்களுக்குப் பிரசித்தமான குடியிருப்புகளாகும்.
(3) சிறு குளங்களுக்கருகில் அமைந்த குடியிருப்புகளாகும்.
(4) ஆற்றுமுகம் சார்ந்த துறைமுகத்தை அண்டிய குடியிருப்புகளாகும்.

**16.** மேல்வருவனவற்றுள் முதலாம் விஜயபாகு பொலன்னறுவைக் காலத்தின் ஒரு சிறந்த மன்னனாகக் கருதப்படுவதற்கு அடிப்படையான பிரதான காரணம் எது ?
(1) வழிபாட்டு இடங்கள் புனரமைக்கப்பட்டமை
(2) வெளிநாட்டு ஆதிக்கத்திலிருந்து நாட்டை விடுவித்துக் கொண்டமை
(3) விவசாயத்தை முன்னேற்றுவதற்கு நடவடிக்கை எடுத்தமை
(4) அயல் நாடுகளுடன் நட்புறவுடன் செயற்பட்டமை

**17.**
- கோட்டையில் பாதுகாப்பு அரணொன்றை நிர்மாணித்தல்
- கம்பளை மூன்றாம் விக்கிரமபாகு மன்னனின் பிரதம மந்திரியாக அரச நடவடிக்கைகளை முன்னெடுத்தமை
- யாழ்ப்பாண ஆரிய சக்கரவர்த்தி மன்னனின் வரி சேகரிப்பு அதிகாரிகளுக்கு எதிராகச் செயற்பட்டமை

மேலேயுள்ள வரலாற்றுச் சம்பவங்களுடன் தொடர்புடையவர்
(1) இளவரசன் சப்புமல்
(2) இளவரசன் அம்புலுகல
(3) சேனாலங்காதிகார தளபதி
(4) நிஸ்சங்க அளகக்கோனார்

**18.** மேல்வரும் எந்தப் போரில் போர்த்துக்கேயர் கீழைத்தேய இனமொன்றினால் படுதோல்வி அடைந்தனர் ?
(1) தந்துரே போர் (2) முல்லேரியாப் போர் (3) ரந்தெனிவெல போர் (4) கன்னொறுவ போர்

**19.** ஒல்லாந்தர் ஆட்சியால் இலங்கைக்குக் கிடைத்த இரண்டு விளைவுகளைக் கொண்ட விடையைத் தெரிவுசெய்க.
A – கறுவா, தோட்டப் பயிர்ச்செய்கையாக ஒழுங்கமைக்கப்பட்டமை
B – பொருட்களின் போக்குவரத்துக்கு கால்வாய் போக்குவரத்து பயன்படுத்தப்பட்டமை
C – பைலா-கபிரிஞ்ஞா இசைக்கலை பிரபல்யம் அடைந்தமை
D – றோமன் கத்தோலிக்க சமயம் பரவியமை
(1) A, B (2) B, C (3) B, D (4) C, D

[பக். 3 ஐப் பார்க்க

20. புதிய பரம்பரை பரிபாலனமொன்றை ஏற்படுத்தி கண்டி ராசதானிக்கு உறுதியானதொரு அடித்தளத்தை இட்டவர்
(1) சேனாசம்பத விக்கிரமபாகு
(2) முதலாம் விமலதர்ம சூரியன்
(3) இரண்டாம் ராஜசிங்கன்
(4) கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்கன்

21. ஒல்லாந்தர் தமது கீழைத்தேய தலைமையகமாக மேல்வருவனவற்றுள் எந்த நகரத்தைத் தெரிவுசெய்தனர் ?
(1) கோவா (2) பாண்டிச்சேரி (3) பத்றேவியா (4) மதராஸ்

22. பிரித்தானியர்களுக்கு இலங்கையைக் கைப்பற்ற வேண்டுமென்ற எண்ணம் உருவாவதிற் செல்வாக்குச் செலுத்திய பிரதான காரணி யாது ?
(1) திருகோணமலை துறைமுகத்தின் அமைவு
(2) இலங்கைக் கறுவாவின் உயரிய தன்மை
(3) பெருந்தோட்டப் பயிர்களுக்கான இடத்தைப் பெற்றுக்கொள்ளல்
(4) கிறிஸ்தவ சமயத்தைப் பரப்புதல்

23. பிரித்தானிய ஆட்சிக்காலத்தில் 'உடல்வரி' விதித்த ஆளுனர்
(1) பிரட்ரிக் நோர்த்
(2) தோமஸ் மெயிட்லண்ட்
(3) வில்லியம் கிரகரி
(4) டொரிங்டன் பிரபு

24. அரசியலமைப்புச் சபைக்கு மாகாண மட்ட தேர்தல் தொகுதிகளினடிப்படையில் அங்கத்தவர்களைத் தெரிவுசெய்தல் ஆரம்பிக்கப்பட்டது எந்த அரசியலமைப்புச் சீர்திருத்தத்தினாலாகும் ?
(1) கோல்புறூக் (2) குறூவ்-மக்கலம் (3) மனிங் (4) டொனமூர்

25. மேல்வருவனவற்றுள் சோல்பரி அரசியல் யாப்பு நடைமுறைப்படுத்தப்பட்டதன் பின்னர் இலங்கையிலேற்பட்ட மாற்றம் எது ?
(1) சர்வஜன வாக்குரிமை வழங்கப்படல்
(2) பாராளுமன்ற முறை அறிமுகம் செய்யப்படல்
(3) நிறைவேற்றதிகார நிர்வாகக்குழுமுறை ஆரம்பிக்கப்பட்டமை
(4) அரச கழகம் நிறுவப்பட்டமை

26. 1978 அரசியல் யாப்புக்கமைய தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவொரு விடயம் தொடர்பாக முடிவெடுப்பதற்கான அதி ஜனநாயகம் மிக்க முறையாவது
(1) வெகுஜன ஊடகங்களின் மூலம் பொதுசன அபிப்பிராயம்
(2) பாராளுமன்றத்தில் விவாதித்தல்
(3) மக்கள் கருத்துக்கணிப்பு ஒன்றை நடத்துதல்
(4) உச்ச நீதிமன்ற தீர்மானத்துக்கமைய செயற்படல்

27. மேல்வருவனவற்றுள் இந்தியாவின் வடமேல் பகுதி வெளி உலகுடன் தொடர்புகளைப் பேணுவதில் செல்வாக்குச் செலுத்ியுள்ள பிரதானமான புவியியல் பௌதிகப் பண்பு யாது ?
(1) கணவாய் வழி (2) பாலைவனங்கள் (3) மலைத்தொடர்கள் (4) ஆறுகள்

28. மகதப் பேரரசனுடன் தொடர்புடைய மேல்வரும் நிகழ்வுகளை அவற்றின் காலக்கிரம வரிசையில் ஒழுங்குபடுத்தினாற் கிடைக்கும் சரியான விடை யாது ?
A – தனநந்தனின் ஆட்சிக்காலத்தில் வட இந்தியாவில் மிகப் பெரிய பிரதேசமொன்றில் மகத இராச்சியம் பரவலடைதல்
B – பிம்பிசார மன்னனால் அங்கதேசம் மகத இராச்சியத்துடன் இணைத்துக் கொள்ளப்படல்
C – மகத இராச்சியத்தின் தலைநகரம் பாடலிபுரத்துக்கு மாற்றப்படல்
D – மகத இராச்சியத்தின் அதிகாரம் மௌரிய அரச பரம்பரைக்குக் கிடைத்தல்
(1) B, A, C, D (2) B, C, A, D (3) C, A, B, D (4) C, B, A, D

29. அசோகன், மகா அக்பர் ஆகிய இரு ஆட்சியாளர்களினதும் கொள்கைகளின் பொதுப்பண்பாவது:
(1) இந்தியாவுக்கு வெளியே பேரரசுகளை விஸ்தரிக்காமை
(2) இலங்கையுடன் அரசியல், கலாசார தொடர்புகளைப் பேணியமை
(3) சமய சகிப்புக் கொள்கையைக் கடைப்பிடித்தமை
(4) தமது அதிகார பலத்தைக் காட்டுவதற்காக நாட்டுக்குள் தூண்களை நிர்மாணித்தமை

30. சோவியத் ரஷ்யாவுக்கு முதன் முதலில் சோசலிசத்தை அறிமுகம் செய்தவர்
(1) விளடிமிர் லெனின்
(2) லியோன் ட்ரோஸ்கி
(3) பெலகானொவீ
(4) மார்தோவ்

[பக். 4 ஐப் பார்க்க

**31.** ஹிட்லரின் அரசியல் சிந்தனை
(1) நாசிசவாதம் (2) முதலாளித்துவம்
(3) பாசிசவாதம் (4) சமூகவுடைமைவாதம்

**32.** முதலாளித்துவ வகுப்பு, தொழிலாளர் வகுப்பு என சமூகப் பிரிவினை ஏற்படுவதில் செல்வாக்குச் செலுத்தியது
(1) நிலப்பண்ணை உரிமை முறை (2) மறுமலர்ச்சி
(3) காலனித்துவ ஆட்சி (4) கைத்தொழில் புரட்சி

**33.** பல நூற்றாண்டுகளாக உறுதியுடன் நிலவிவந்த சீன சமூகம் மேல்வரும் எந்த நிகழ்வின் விளைவாக வேகமாக மாற்றமடைய ஆரம்பித்தது ?
(1) குவோ மிங் டான் கட்சியில் செல்வாக்குடையவனாதல்
(2) நீண்ட நடைப்பயணம்
(3) பாரிய முன் பாய்ச்சல்
(4) பண்பாட்டுப் புரட்சி

**34.** சீனக் கூட்டரசின் முதலாவது ஜனாதிபதி
(1) சுன்-யத்-சென் (2) சியங்-காய்-செக்
(3) யுவாங்-ஷி-காய் (4) மாஓ-சே-துங்

**35.** ஜப்பானின் நிலவுடைமை முறையை இல்லாதொழித்தவர்
(1) நொபுனகா (2) ஹிதேயோஷி
(3) டொகுகாவா இயா ஷு (4) முட்சுஹிதோ பேரரசன்

**36.** 'டயட் சபை' மேல்வரும் எந்த நாட்டின் சட்டத்துறை ?
(1) சீனா (2) ஜப்பான் (3) கொரியா (4) இஸ்ரேயில்

**37.** மேற்கு ஐரோப்பிய நாடுகளின் பாதுகாப்பிற்காக அமெரிக்க ஐக்கிய ராச்சியத்தின் தலைமையில் அமைக்கப்பட்ட அமைப்பு யாது ?
(1) நேட்டோ (2) சார்க் (3) அணிசேரா நாடுகள் (4) வோர்ஸோ

**38.** மேல்வரும் ரகசிய ஒற்றர் சேவைகளைக் கொண்ட நாடுகளை ஒழுங்குமுறையில் காட்டும் விடை யாது ?

| | |
|---|---|
| (i) மத்திய ரகசியப் புலனாய்வு அமைப்பு (CIA) | A – இஸ்ரேயில் |
| (ii) மொசாட் அமைப்பு (MOSSAD) | B – சோவியத் ஒன்றியம் |
| (iii) K.G.B உளவுச் சேவை | C – ஜேர்மனி |
| | D – அமெரிக்க ஐக்கிய அரசுகள் |

(1) A, D, B (2) A, D, C (3) C, B, A (4) D, A, B

**39.** மொன்ற்றெஸ்கியூ, வொல்ற்ரேயர், ரூசோ ஆகியோரின் கருத்துகளால் மேல்வரும் எந்த வரலாற்று நிகழ்வுக்கான சூழ்நிலை ஏற்படுத்தப்பட்டது ?
(1) ரஷ்யப் புரட்சி (2) சீனப் புரட்சி
(3) பிரான்சியப் புரட்சி (4) அமெரிக்க சுதந்திரப் போர்

**40.** 1948 'வெல்பர் பிரகடனத்தினால்' உருவாக்கப்பட்ட புதிய அரசு
(1) இஸ்ரேயில் (2) குரேஷியா (3) யூகோஸ்லாவியா (4) பலஸ்தீனம்

* * *

 111206





**33 T II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2015 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2015 டிசெம்பர்
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2015**

ඉතිහාසය II
வரலாறு II
History II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

* பகுதி **I** இன் **முதலாம்** வினா கட்டாயமானது.
* பகுதி **II** இலிருந்து **மூன்று** வினாக்களுக்கும் பகுதி **III** இலிருந்து **இரு** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* எல்லாமாக **ஆறு** வினாக்களுக்கு விடை எழுதுக.

## பகுதி I

**1.** (அ) கீழே (i) இல் குறிப்பிடப்பட்டுள்ள அனைத்து வரலாற்று இடங்களையும் தரப்பட்டுள்ள இலங்கைப் படத்திலும் (ii) இல் குறிப்பிடப்பட்டுள்ள அனைத்து வரலாற்று இடங்களையும் தரப்பட்டுள்ள உலகப் படத்திலும் குறித்துப் பெயரிடுக.

(i) யோத வாவி, மஹியங்கனை, கால்க நதி, மிகிந்தலை, பண்டுவஸ்நுவர, பராக்கிரம சமுத்திரம், கசாதோட்டை, இலங்கைத்துறை, யாழ்ப்பாண நகரம், கொடவாயா (10 புள்ளிகள்)

(ii) சிந்து நதி, மலாக்கா நீரிணை, கோவா, ஹிரோஷிமா, ரோம், தாய்வான், தில்லி, கம்போடியா (08 புள்ளிகள்)

(ஆ) (i) மேல்வரும் *A, B, C, D* ஆகிய வரலாற்றுத் தகவல்களுடன் தொடர்புடைய நபர்களை/இடங்களை ஒழுங்குமுறையில் உங்கள் விடைத்தாளில் எழுதுக.

*A* - இளவரசன் விஜயன் உள்ளிட்டோர் இந்நாட்டில் கரையிறங்கிய இடம்

*B* - வடமேற்கு இந்தியா மீது படையெடுத்த முதலாவது கிரேக்கப் பேரரசன்

*C* - இந்தியாவுக்குச் சுதந்திரம் கிடைக்கும்போது பிரித்தானியாவின் பிரதமராக இருந்தவர்

*D* - தொலைபேசியைத் தயாரித்த அமெரிக்கர் (04 புள்ளிகள்)

● *A, B* ஆகிய படங்களை அவதானித்து, கேட்கப்பட்டுள்ள வினாக்களுக்கான விடைகளை **இலக்கங்களின் ஒழுங்கில்** உங்கள் விடைத்தாளில் எழுதுக.

(ii) 1. *A* இனால் காட்டப்பட்டுள்ள நிர்மாணிப்பின் பெயர் என்ன ?
2. இதனை நிர்மாணித்த மன்னனின் பெயரைத் தருக.
3. இலங்கையின் எந்த வரலாற்று நகரத்தில் இது காணப்படுகின்றது ?
4. இதன் சுவர்களின் அரைவட்ட வடிவிலான குடைந்தெடுக்கப்பட்ட பகுதிகளில் எதனைக் காணக்கூடியதாய் உள்ளது ? (04 புள்ளிகள்)



*A*

(iii) 1. *B* யினால் காட்டப்படுவது யாது ?
2. அதன் இடது உள்ளங்கையின் மீது எதனைக் காணக்கூடியதாய் உள்ளது ?
3. இவ்வாறான நிர்மாணிப்புகளை எந்த இடங்களுக்கு முன்னால் அதிகமாகக் காணலாம் ?
4. இவ்வாறான நிர்மாணிப்புகளுக்காகப் பெரிதும் பயன்படுத்தப்பட்டுள்ள மூலப்பொருள் யாது ? (04 புள்ளிகள்)



*B*

[பக். 2 ஐப் பார்க்க

## பகுதி II

2. (i) *A* - கதம்ப நதி
*B* - கோண நதி
*C* - கப்பக்கந்தர நதி
ஆகிய நதிகளின் தற்போதைய பெயர்களை அடைப்புக்குறிக்குள்ளிருந்து தெரிவுசெய்து எழுதுக.
(கலா ஓயா, தெதுறு ஓயா, மல்வத்து ஓயா, யான் ஓயா, மாணிக்க கங்கை, கும்புக்கன் ஓயா)
(03 புள்ளிகள்)

(ii) *A* - வசபன்
*B* - மகாசேனன்
*C* - தாதுசேனன்
*D* - இரண்டாம் அக்போ
ஆகிய ஒவ்வொரு ஆட்சியாளராலும் செய்யப்பட்ட நீர்ப்பாசனத் திட்டம் யாதென அடைப்புக்குறிக்குள்ளிருந்து தெரிவுசெய்து ஒழுங்குமுறையில் எழுதுக.
(அபயவாவி, கந்தளாய்க் குளம், ஹுருலுவாவி, திசாவாவி, மகாவிலச்சிக்குளம், நாச்சதூவ வாவி, பதவியாக்குளம், கலாவாவி)
(04 புள்ளிகள்)

(iii) அனுராதபுர இராசதானி வீழ்ச்சியடைய ஏதுவான காரணிகள் **இரண்டை** விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) நீர்வள நாகரிகத்தின் மத்திய நிர்வாகம் ஒழுங்கமைக்கப்பட்ட விதத்தை மேல்வரும் தலைப்புகளின்கீழ் விபரிக்குக.
*A* - அரசனுக்குரிய பொறுப்புகள்
*B* - அரச அதிகாரிகள்
(06 புள்ளிகள்)

3. (i) அனுராதபுர, பொலன்னறுவைக் காலங்களில் இலங்கையுடன் வர்த்தகத் தொடர்புகளைப் பேணிய **மூன்று** நாடுகளைப் பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) கடந்த காலங்களில் இலங்கைக்கு இறக்குமதி செய்யப்பட்ட வர்த்தகப் பண்டங்கள் **இரண்டையும்** இலங்கையிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட வர்த்தகப் பண்டங்கள் **இரண்டையும்** வெவ்வேறாக எழுதுக.
(04 புள்ளிகள்)

(iii) வெளிநாட்டுத் தொடர்புகள் விருத்தியடைவதிற் செல்வாக்குச் செலுத்திய இலங்கையின் அமைவிடத்துக்குரிய முக்கிய அம்சங்கள் **இரண்டை** விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) பௌத்த சமயத்தால் இந்நாட்டில்
*A* - கட்டடக்கலை
*B* - சிற்பக்கலை, செதுக்குக்கலை
என்பன வளர்க்கப்பட்ட விதத்தை உதாரணங்களுடன் எடுத்துக்காட்டுக. (06 புள்ளிகள்)

4. (i) மேல்வரும் பிரதேசங்கள் எந்த வரலாற்றுப் பெயர்களால் அழைக்கப்பட்டனவென அடைப்புக்குறிக்குள்ளிருந்து தெரிவுசெய்து எழுதுக.
(03 புள்ளிகள்)
*A* - யாழ் குடாநாடு
*B* - கிட்டத்தட்ட தற்போதைய வடமத்திய மாகாணத்துக்குரிய பிரதேசம்
*C* - மத்திய மலைநாடு
(சப்ரகமுவ, மலையரட்டை, தமன்கடுவ, பிஹிட்டி ரட்ட, நகதிவ, திகாமடுல்ல)

(ii) மேல்வரும் சம்பவங்களுடன் தொடர்புடையவர்களின் பெயர்களை அடைப்புக்குறிக்குள் இருந்து தெரிவுசெய்து எழுதுக.
*A* - முதலாவதாகச் சங்காராமம் ஒன்றை தனியாருக்கு வழங்கியவன்
*B* - புனித தந்ததாது இலங்கைக்குக் கொண்டுவரப்பட்ட காலப்பகுதியில் அனுராதபுரத்தில் ஆட்சிசெய்தவன்
*C* - அதிகளவிலான கல்வெட்டுகளை நிறுவி துலாபாரக் கொடை வழங்கல் தொடர்பாகப் பிரபல்யமானவன்
*D* - சங்கமு விகாரைக் கல்வெட்டுக்கமைய முதலாம் பராக்கிரமபாகுவுடன் உடன்படிக்கை செய்தவன்
(வோகாரிக திஸ்ஸ, இரண்டாம் கஜபாகு, சிரிசங்கபோதி, கீர்த்தி ஸ்ரீ நிசங்கமல்லன், சகஸ்ஸமல்லன், வலகம்பா, கித்சிரிமெவன், மானாபரணன்)
(04 புள்ளிகள்)

(iii) பொலன்னறுவைக் காலத்துக்குப் பின்னர் நிர்வாகத் தலைமையகங்களைத் தெரிவுசெய்வதில் ஆட்சியாளர்களினால் கவனம் செலுத்தப்பட்ட **இரண்டு** விடயங்களை விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) ஆறாம் பராக்கிரமபாகுவின் ஆட்சிக்காலம் அரசியல், கலாசாரரீதியில் முக்கியத்துவம் பெறுவதற்கான காரணங்களை உதாரணங்களுடன் விளக்குக. (06 புள்ளிகள்)

[பக். 3 ஐப் பார்க்க

5. (i) விஜயபா கொள்ளயவின் பின்னர் ஏற்பட்ட
A - கோட்டே
B - சீதாவாக்கை
C - ரைகம
போன்ற இராச்சியங்களின் ஆரம்பகால ஆட்சியாளர்கள் **மூவரைப்** பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) மேல்வரும் *A, B, C, D* ஆகியவற்றினால் காட்டப்பட்டுள்ள வரலாற்றுச் சம்பவங்களுடன் தொடர்புடைய நபர்களை அடைப்புக்குறிக்குள்ளிருந்து தெரிவுசெய்து, ஒழுங்குமுறையில் எழுதுக.
A - போர்த்துக்கேயரின் கைப்பொம்மையாக இருந்த கோட்டே ராச்சியத்தின் ஆட்சியாளன்
B - முதல் தடவையாக போர்த்துக்கேயருக்கு எதிராக கடுமையான நடைமுறையைப் பின்பற்றிய யாழ்பாண ஆட்சியாளன்
C - 'கீவ் ஆணைப்படி' இலங்கையின் கரையோர மாகாணங்களை ஆங்கிலேயருக்குக் கையளிக்க விரும்பாத ஒல்லாந்து தேசாதிபதி
D - கி.பி. 1815 உடன்படிக்கையில் கைச்சாத்திட்ட பிரித்தானிய தேசாதிபதி
(ஜோன் டொய்லி, ரொபர்ட் பிரவுண்றிக், தொன் ஜுவன் தர்மபால, வீதிய பண்டார, சங்கிலியன், பரராஜசேகரன், பன் எங்கள்பேர்க், ரைக்லோவ்.'.பா வன் ஹுன்ஸ்) (04 புள்ளிகள்)

(iii) கி.பி. 1818 இல் மலைநாட்டுப் பிரதேசங்களில் ஆரம்பித்த பிரித்தானியருக்கு எதிரான சுதந்திரப் போராட்டம் தோல்வியடைவதற்கு ஏதுவான **இரண்டு** காரணங்களை விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) பெருந்தோட்டப் பயிர்ச்செய்கை விருத்தி காரணமாக இலங்கையின் சமூக பொருளாதாரத் துறைகளில் ஏற்பட்ட மாற்றங்களுக்கு **ஒவ்வோர்** உதாரணங்களைத் தந்து, விபரிக்குக. (06 புள்ளிகள்)

6. (i) மேல்வரும் விடயங்கள் எந்த அரசியல்யாப்புச் சீர்திருத்தத்துக்கமைய நடைமுறைப்படுத்தப்பட்டனவெனக் குறிப்பிடுக.
A - பழமையான கிராமசபையின் அதிகாரங்களை நீதிமன்றங்களுக்குக் கையளித்தல்
B - நிர்வாகக்குழு ஆட்சிமுறை ஆரம்பிக்கப்பட்டமை
C - மேற்சபை (செனட் சபை) உருவாக்கப்பட்டமை (03 புள்ளிகள்)

(ii) மேல்வரும் *A, B, C, D* ஆகியவற்றினால் குறிப்பிடப்பட்டுள்ள தகவல்களுடன் தொடர்புடையவர்களைக் குறிப்பிடுக.
A - லங்கா சமசமாஜக் கட்சியின் ஆரம்பகாலத் தலைவர்
B - சுதந்திர இலங்கையின் முதலாவது பிரதமர்
C - இலவசக் கல்வியின் தந்தை
D - இலங்கையின் முதலாவது நிறைவேற்றதிகார ஜனாதிபதி (04 புள்ளிகள்)

(iii) சுதந்திரத்தின் பின்னர் இலங்கையின் கல்வி அபிவிருத்திக்காக மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் **இரண்டை** விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) மேல்வருவோருள் **இருவரைத்** தெரிவுசெய்து, அவர்கள் சமய, கலாசார மறுமலர்ச்சிக்கு ஆற்றிய பணிகளை விபரிக்குக.
A - அனகாரிக தர்மபால
B - வண. ஹிக்கடுவே ஸ்ரீ சுமங்கள தேரர்
C - சேர். பொன்னம்பலம் இராமநாதன்
D - ஆறுமுகநாவலர்
E - எம். சி. சித்தி லெப்பை
F - ரி. பி. ஜாயா (06 புள்ளிகள்)

## பகுதி III

7. (i) மேல்வரும் *A, B, C* ஆகியவற்றினால் காட்டப்பட்டுள்ள ஒவ்வொரு விடயத்திற்குமுரிய விடைகளை ஒழுங்குமுறையில் எழுதுக.
A - ஆரியர்களின் வருகைக்கு முன்னர் இந்தியாவின் வடமேற்குப் பிரதேசத்தில் பரந்து காணப்பட்ட நாகரிகம்
B - ஆரியர்கள் இந்தியாவுக்குப் புலம்பெயர்வதற்குப் பயன்படுத்திய பிரதானமான கணவாய் வழி
C - 'சப்த சிந்து' பிரதேசத்தின் தற்போதைய பெயர் (03 புள்ளிகள்)

(ii) A - வேத நூல்கள் **இரண்டையும்**
B - வேதகாலத்தில் வழிபடப்பட்ட தெய்வங்கள் **இரண்டையும்**
பெயரிடுக. (04 புள்ளிகள்)

(iii) அசோகப் பேரரசனின் சமயப் பணிகளை **இரண்டு** விடயங்களின் அடிப்படையில் விபரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) குப்தர் காலத்தில் கல்வி, இலக்கியம், கலை ஆகிய துறைகளில் ஏற்பட்ட முன்னேற்றத்தை விளக்குக. (06 புள்ளிகள்)

[பக். 4 ஐப் பார்க்க

**8.** (i) *A* - ‘கல்கத்தாவில் இந்திய கழகம்’ தாபிக்கப்பட்டமை

*B* - ‘இந்திய தேசிய ஒன்றியம்’ ஆரம்பிக்கப்பட்டமை

*C* - இந்திய முஸ்லிம்களுக்கு வேறானதொரு இராச்சியத்தின் தேவைப்பாடு முதன்முதலில் எடுத்துக்காட்டப்பட்டமை

ஆகிய விடயங்களுடன் தொடர்புடையவர்களை அடைப்புக்குறிக்குள் இருந்து தெரிவுசெய்து, ஒழுங்குமுறையில் குறிப்பிடுக.

(மகாத்மா காந்தி, முகமது இக்பால், முகமது அலி ஜின்னா, எலன் ஒக்டேவியன் ஹியூம், கர்சன் சாமி, சுரேந்திரநாத் பனார்ஜி) (03 புள்ளிகள்)

(ii) இந்தியத் தேசிய காங்கிரசின் அடிப்படை நோக்கங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) கி.பி. 1857 ஆம் ஆண்டின் இந்தியக் கிளர்ச்சிக்கான உடனடிக் காரணத்தைக் குறிப்பிட்டு, அந்தக் கிளர்ச்சி தோல்வியடைவதிற் செல்வாக்குச் செலுத்திய காரணிகள் **மூன்றைக்** குறிப்பிடுக. (05 புள்ளிகள்)

(iv) கி.பி. 1947 இல் இந்தியா இரண்டாகப் பிளவுபடுவதற்குப் பிரித்தானியர் கையாண்ட கொள்கைகள் ஏதுவான விதத்தை **இரண்டு** விடயங்களின் துணையுடன் விளக்குக. (06 புள்ளிகள்)

**9.** (i) ஐரோப்பாவில் முதன்முதலில் உருவான தேசிய அரசுகள் **மூன்றைப்** பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) மேல்வரும் *A, B, C, D* ஆகியவற்றினாற் குறிப்பிடப்படும் தகவல்களுடன் தொடர்புடையவர்களை அடைப்புக்குறிக்குள் இருந்து தெரிவுசெய்து, ஒழுங்குமுறையிற் குறிப்பிடுக.

*A* - மேற்கிந்தியத் தீவுகளைக் கண்டுபிடித்தல்

*B* - முதன்முதலாக ஆபிரிக்காவின் தென்முனைக்குப் பயணம் செய்தல்

*C* - பிலிப்பைன் தீவுகள் கண்டுபிடிக்கப்படல்

*D* - புவியீர்ப்புக் கொள்கை கண்டுபிடிக்கப்படல்

(சேர் ஐசாக் நியூட்டன், கலிலியோ கலிலி, கிறிஸ்தோபர் கொலம்பஸ், வாஸ்கொடகாமா, பார்த்தலோமியஸ் டயஸ், மகலன், கடலோடி ஹென்றி, பிரான்சிஸ்கோ த அல்மேதா) (04 புள்ளிகள்)

(iii) தேசிய அரசொன்றின் பண்புகள் **மூன்றை** விபரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) *A* - ஸ்பானிய தேசத்தவர்கள் அமெரிக்கப் பிரதேசங்களிலும்

*B* - போர்த்துக்கேயர் கீழைத்தேயப் பிரதேசங்களிலும்

அதிகாரத்தைப் பரவலாக்கும்போது பின்பற்றிய நடவடிக்கைகளுக்கு **ஒவ்வோர்** உதாரணம் தந்து, விளக்குக. (06 புள்ளிகள்)

**10.** (i) முதலாவது உலகப் போரின்

*A* - உடனடிக் காரணம்

*B* - அதில் சம்பந்தப்பட்ட ஜேர்மனிய ஆட்சியாளரின் பெயர்

*C* - அமெரிக்க ஐக்கிய அரசுகள் சம்பந்தப்படுவதில் செல்வாக்குச் செலுத்திய காரணம்

ஆகியவற்றைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) இரண்டாம் உலகப் போரில்

*A* - நட்பு நாட்டுப் படைகளுக்குத் தலைமைதாங்கிய பிரித்தானியப் பிரதமரையும்

*B* - ஹிட்லரின் கொடூரமான சித்திரவதைக்குட்பட்ட மக்கட் குழுவினரையும்

*C* - கிழக்கில் ஜப்பானியர் கைப்பற்றிய நட்பு நாடுகளின் பிரதானமான இராணுவத் தளத்தையும்

*D* - இத்தாலியை போரில் ஈடுபடுத்திய அந்நாட்டின் பாசிச தலைவரையும்

அடைப்புக்குறிக்குள் இருந்து தெரிவுசெய்து, *A, B, C, D* ஒழுங்கில் குறிப்பிடுக.

(ஹிரோஹித்தோ பேரரசன், முசோலினி, யுதேவ், ஸ்லாவ், சிங்கப்பூர், கல்கத்தா, வின்சன்ட் சேர்ச்சில், கிளெமன்ட் எட்லி) (04 புள்ளிகள்)

(iii) இரண்டாம் உலகப் போர் இதுவரை உலகில் ஏற்பட்ட மோசமான பெருங்கேடு என்பதனை **இரண்டு** காரணங்களின் துணையுடன் விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) இரண்டாம் உலகப் போரின் பின்னர் உலக அரசியலில் ஏற்பட்ட மாற்றங்கள் **மூன்றை** விபரிக்குக. (06 புள்ளிகள்)

* * *

OL/2015/33-STE-II





**33 | STE | II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2015 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2015 டிசெம்பர்
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2015**

ඉතිහාසය **II**
வரலாறு **II**
History **II**

1. (අ) (i)
1. (அ) (i)
1. (a) (i)

විභාග අංකය / சுட்டெண் / Index No. ..............................



1. (අ) (ii)
1. (அ) (ii)
1. (a) (ii)

